எல்லாரும் நல்லறிவுடையராகவும் எல்லாரும் நல்லன்பும் நல்லெண்ணமும் நற்செய்கையும் உடையராகவும் விளங்க இந்நிலவுலகந் தேவர்கள் உறையும் வானுலகமே யாகி, இந் நில வாழ்க்கை தேவர்கள் வாழும் இன்பவாழ்க் கையேயாகி, எல்லாம் இன்பமேயாய், எல்லாம் அன்பே யாய், எல்லாம் அருளேயாய் விளங்குமென்று உறுதி யாய் நம்புங்கள் ! நம் மக்களுக்குச் செய்ய வேண்டிய இப் பெருங் கடமையை நாம் வழுவாது செய்து வருவோ மாயின், எல்லாம் வல்ல சிவபெருமான் நமக்கு அருள் புரிவது திண்ண மென்றும் உறுதியாய் நம்புங்கள் ! ஓம் சிவம்.

